Regd. No. TN/MS (C) 244 ANNA Leading Progressive Tamil Daily of the People (MADRAS) Phone: 420212 4 பக்கம் விலை 50 காசு
POST WITHOUT PRE-PAYMENT LICENCE NO G6-TN-MS (C) P.P. 55

**ஆங்கிலம்**

ஆங்கிலம் அன்னியரோடு தொடர்பு படுத்தும் மொழியென்ற காரணத்தால் நாம் ஆங்கிலத்தை விலக்க முடியாது.

-பேரறிஞர் அண்ணா

# அண்ணா

நிறுவனர்: எம்.ஜி.ஆர்

**அறிவு. ஆராய்ச்சி**

மாணவ மாணவியர் அறிவுப் பெருக்கம் நிறைந்த நல்லகருத்துக்கள் கொண்ட நூல்களை வாங்கிப் படித்து அறிவு ஆராய்ச்சி பெற வேண்டும்.

தந்தை பெரியார்

மலர்: 8 சென்னை 21 - 5 - 1984 திங்கள் ※※ வெளியூர் 22 - 5 - 1984 செவ்வாய் இதழ்: 214

## ஃ நீதிக்கும் - அநீதிக்கும் இடையே நடந்த போரில் நீதி வென்றது
## ஃ புரட்சித்தலைவரது தர்மயுத்தத்தில் உண்மை வென்றது
## ஃ தமிழ் மக்கள் புரட்சித்தலைவர் பக்கம்தான் என்பதைமீண்டும் வெளிப்படுத்தினர்

## உப்பிலியாபுரம் -
## மயிலாடுதுறை - தஞ்சாவூர்
## 3 தொகுதிகளிலும் கழக அணி

# அமோக வெற்றி

# கருணாநிதியின் பொய்மை அரசியலுக்கு முற்றுப்புள்ளி

சென்னை, மே. 21- நேற்று வாக்குப்பதிவு நடந்த 4 சட்டமன்ற தொகுதிகளிலும் இன்று நடந்த வாக்கு எண்ணிக்கையில் உப்பிலியாபுரம், மயிலாடுதுறை, தஞ்சை ஆகிய 3 தொகுதிகளிலும் கழக அணி முன்னணியில் உள்ளது. கழக அணி வேட்பாளர்கள் வெற்றிவாகை சூடும் நிலையில் உள்ளனர்.

அண்ணாநகர், உப்பிலியாபுரம், மயிலாடுதுறை, தஞ்சாவூர் ஆகிய 4 சட்டமன்ற தொகுதிகளிலும் இடைத்தேர்தலை ஒட்டி நேற்று வாக்குப்பதிவு நடந்தது.

வாக்குகள் எண்ணிக்கை இன்று காலை 8 மணிக்கு 4 இடங்களிலும் தொடங்கியது

### உப்பிலியாபுரம்:
### கழகம் அமோக வெற்றி

உப்பிலியாபுரம் தொகுதியில் வாக்குகள் எண்ணிக்கை துறையூர் நகரசபை மேல்நிலைப்பள்ளி கட்டிடத்தில் 8 மணிக்கு தொடங்கியது.

வாக்குகள் எண்ணிக்கை துவங்கியதில் இருந்தே கழகவேட்பாளர்சரோஜா முன்னணியில் இருந்துவந்தார்.

உப்பிலியாபுரம் தொகுதி வாக்காளர் 1,34,147

பிற்பகல் 4-30மணி நிலவரப்படி கழகவேட்பாளர் திருமதி சரோஜா தி. மு. க வேட்பாளரைவி- 13,400 வாக்குகள் கூடுதலாகப் பெற்று வெற்றி பெறும்நிலையில் உள்ளார்

### மயிலாடுதுறை: கழகம்முன்னணி

மயிலாடுதுறையில் தி. மு க. வேட்பாளராக கிட்டப்பா வெற்றி பெற்றார். அவர்கருணாநிதியின் எதேச்சதிகாரத்தை கண்டித்து தி மு கவில் இருந்து வெளியேறிகழகத்தில் இணைந்தார்.

அவர் அகால மரணம் அடைந்ததால் இடைத் தேர்தல்நடைபெறுகிறது.

இந்த தொகுதியில் கழக வேட்பாளராக தம்பி பாலவேலாயுதம் போட்டியிட்டார்.

இந்த தொகுதியில் மொத்த வாக்காளர் 1,16,869

மாலை 4.30 மணி நிலவரப்படி கழக வேட்பாளர் தம்பிபாலவேலாயுதம் தி மு. க. வேட்பாளரைவிட 2,080 வாககுகள் கூடுதலாகப் பெற்று முன்னணியில்உள்ளார்.

### தஞ்சாவூர்: இ.காங். வெற்றி

தஞ்சை தொகுதியில் கழகஆதரவுடன் இந்திரா காங்கிரஸ் வேட்பாளர் அய்யாறு வாண்டையார் போட்டியிட்டார்.

இந்தொகுதி கருணாநிதி நின்று வெற்ற பெற்ற தொகுதி. அதில் இருநது தி. மு க. தொகுதியாக இருந்து வந்தது.

இந்தத் தேர்தலில் கழகம் இந்த தொகுதியை இந்திரா காங்கிரசுக்கு விட்டுக் கொடுகதது இந்திரா காங்கிரஸ் வேட்பாளராக அய்யாறு வாண்டையார் போட்டியிட்டார்.

தஞ்சை தொகுதியில் மொத்த வாக்காளர்:- 1,35,324

இந்திரா காங்கிரஸ் வேட்பாளர் தி. மு. கவைவிட 5,477 வாக்குகள் அதிகம் பெற்றுள்ளார். இன்னும் சில ஆயிரம் வாக்குகளே எண்ணப்பட உள்ளதாக மாலை 4.30 மணிக்கு வந்த செய்தி தெரிவிகிறது.

இந்த தேர்தல் நீதிக்கும் அநீதிக்கும் இடையே நடக்கும் போர் என்று முதல்வர் புரட்சித தலைவர் கருத்துத் தெரிவித்து இருந்தார்.

அதன்படி நீதி வென்றது; உண்மை வென்றது. 5 கோடி தமிழ் மக்களும் முதல்வர் புரட்சிதலைவர் பக்கம்தான் என்பதை மக்கள் தெளிவாக வெளிபடுத்தியுள்ளனர்.

### தி. மு. க. கோட்டைகள் சரிந்தன

தஞ்சைத் தொகுதியும் மயிலாடுதுறையும் தி முகவினரின் கோட்டைகள் என கருணாநிதி கூறியிருந்தார்.

1971-ம் ஆண்டிலிருந்து தொடர்ந்து 13 ஆண்டுகள் திமுகவினர் வசம் இருந்த தஞ்சை தொகுதியில்கழக அணி வேட்பாளர் வெற்றி பெற்றுள்ளார்.

17 ஆண்டு காலமாக தி.மு.கவினரின் கோட்டை

(1ம பக்தி பார்க்க)

### அண்ணாநகர் தொகுதி நிலவரம்

அண்ணாநகர் தொகுதி வாக்குகள் எண்ணிக்கை நேரு விளையாட்டரங்கில் தொடங்கியது.

வாக்குகள் எண்ணிக்கையில் முதலில் கழக வேட்பாளர் சிறிது முன்னணியில் நின்றார் பிறகு தி.மு.க. வேட்பாளர் முன்னணியில் இருந்தார்.

இப்படி கண்ணாமூச்சி நிலை இருந்ததுவருகிறது

(8-ம் பத்தி தொடர்ச்சி)

யாக இருந்த மயிலாடுதுறையை தி.மு.க. இழந்தது.

கருணாநிதியின் சொந்த மாவட்டமான தஞ்சை, கருணாநிதியை அடியோடு புறக்கணித்து கருணாநிதியின் கனவு கோட்டைகளை சரிய வைத்துவிட்டது.

## புரட்சித்தலைவர் கூறியபடி உண்மை வென்றது

நடைபெற்ற இந்த இடைத்தேர்தலில் உண்மை வெல்லும் என்று முதல்வர் புரட்சித் தலைவர் கூறியபடி உண்மை வென்றது.

தேர்தல் பிரசாரத்தில் ஈடுபட்டு இருந்த முதல்வர் புரட்சித்தலைவர் மயிலாடுதுறையில் இந்த இடைத்தேர்தல பற்றி கருக்து தெரிவித்தார்.

தி. மு. க. தலைவர் கருணாநிதியின் பொய் பிரசாரம் மீது மக்கள் ஆத்திரம் அடைந்துள்ளனர் மக்களிடையே இந்த எண்ணம் இருப்பதால் "உண்மை வெல்லும்" என்றார் புரட்சித்தலைவர். அதன்படி உண்மை வென்று விட்டது.

புரட்சித்தலைவர் பக்கமே தமிழ்மக்கள் இருக்கிறார்கள் என்பதை தமிழக மக்கள் வெளிப்படுத்தி விட்டனர்.

## 25 கிலோ மீட்டர் கால்வாய் வெட்ட 275 ஏக்கர் நிலம் ஆர்ஜிதம்

# கிருஷ்ணா நதிநீர்திட்டம்:5ராட்சத இயந்திரம்2500 பேர் தீவிரப்பணி

## கொளுத்தும் வெய்யிலிலும் போர்கால அடிப்படையில் பணிகள்

**சென்னை. மே. 21- கிருஷ்ணா நதிநீர் திட்ட வேலை தமிழக எல்லைப்பகுதியில் கொளுத்தும் வெயிலிலும் போர்க்கால அடிப்படையில் நடைபெறுகிறது 5 ராட்சத இயந்திரங்களுடன் 2500 பேர் இந்தப் பணியில் ஈடுபடுத்தப்பட்டுள்ளனர் 25 கிலோ மீட்டர் கால்வாய் வெட்ட 275 ஏக்கர் நிலம் ஆர்ஜிதம் செய்யப்பட்டுள்ளது.**

கிருஷ்ணா நதிநீர் திட்டம் முதல்வர் புரட்சித் தலைவர் ஆட்சியில்செயல்படுத்த நடவடிக்கை எடுக்கப்பட்டுள்ளது தெரிந்ததே.

சென்னை நகருக்கு கருணாநிதி ஆட்சிக்காலத்தில் வீராணம் திட்டம் போடப்பட்டு பலகோடிரூபாய் பாழானது தெரிந்ததே.

அதன்பிறகு புரட்சித் தலைவர் ஆட்சியில் கிருஷ்ணாநதி நீர் திட்டம் மேற்கொள்ளப் பட்டுள்ளது.

இத்திட்டம் கடந்த ஆண்டு ஆகஸ்டில் பிரதமர் இந்திராகாந்தியால் துவக்கிவைக்கப் பட்டது.

தெலுங்குகங்கா என்று ஆந்திர அரசு இந்த திட்டத்திற்கு பெயர் வைத்துள்ளது.

இத் திட்டத்தால் நமது எல்லைக்கு 13 டி. எம். சி. தண்ணீர் வரும்.

நம் எல்லையில் இந்த நீரைப் பெற்றுக்கொண்டு தேக்கி வைக்க பணிகள் துவக்கப்பட்டு விட்டன.

### ராட்சத இயந்திரங்கள்

சென்னை திருப்பதி ரோடில் ஊத்துக்கோட்டைக்கு அருகே உள்ள தாமரை குப்பம் என்ற கிராமம் இருக்கிறது.

தாமரைக்குப்பத்தில் இருந்து 3.5 மீட்டர் தொலைவுக்கு நல்லரோடு போடப்பட்டுள்ளது.

25 கிலோ மீட்டர் கால்வாய் தோண்டும் பணி தொடங்கப்பட்டு விட்டது.

இந்தப் பணியில் 5 ராட்சத இயந்திரங்கள் ஈடு பட்டுள்ளன.

ஒரு மேற்பார்வை பொறியாளர் தலைமையில் 3 நிர்வாகப்பொறியாளர்கள், 10 உதவி நிர்வாகப் பொறியாளர்கள், 40 உதவிப் பொறியாளர்கள், 200 உதவியாளர்கள், 2000க்கும் மேற்பட்ட ஆட்கள் கொளுத்தும் வெயிலிலும் கால்வாய் தோண்டும் பணியில் ஈடுபட்டுள்ளனர்.

25 கிலோ மீட்டர் கால்வாய் வெட்ட 275 ஏக்கர் நிலம் ஆர்ஜிதம் செய்யப்பட்டுள்ளது.

### கால்வாய்

தாமரைக்குப்பம் ஊத்துக்கோட்டை, அருந்தேரி, போத்தவாக்கம் ஆகிய ஊர்களில் கால்வாய் வெட்டப்படுகிறது.

10 அடி ஆழம், 10 அடி அகலமுள்ளதாக கால்வாய் இருக்கும் கீழ் பகுதியில் 4 அடி அகலம் 6 அடி ஆழத்திற்கு அமைக்கப்பட்ட கால்வாயில் நீர் வரும்.

மழைக் காலத்திற்குள் இதனை முடிக்க பணி தீவிரமாக நடைபெற்று வருகிறது.

இந்த கால்வாய் வெட்டும் பணி முடிந்த பிறகு 2-வது கட்டப் பணி மேற்கொள்ளப்படும்.

பூண்டி ஏரியில் கரை உயர்த்தும் பணி மேற்கொள்ளப்படும் இதற்கு 1100 ஏக்கர் நிலம் ஆர்ஜிதம் செய்யப்படும்.

### 3-வது கட்டம்

3 வது கட்டமாக பூண்டி ஏரியில் இருந்து திருப்பெரும்புதூர் ஏரி வரை இணைப்புக்கால்வாய் அமைக்கப்படும்.

நான்காவதாக திருப்பெரும்புதூர் ஏரிக்கரை முழு அளவில் உயர்த்தப்படும்.

இதற்கு 500 ஏக்கர் நிலம் ஆர்ஜிதம் செய்யப்படும்.

கடைசியாக புழலேரி கரை முழுஏரி அளவுக்கு உயர்த்தப்படும். இதற்கு 600ஏக்கர் நிலம் ஆர்ஜிதம் செய்யப்படும்.

இந்தப் பணிகள் அனைத்தும் இந்த ஆண்டுக்குள் முடிக்கப்படும் என்று கருதப்படுகிறது.

---

## சென்னை-பெங்களூர் நேரடி விமான போக்குவரத்து

### அமைச்சர் ஆர். எம். வீ. வலியுறுத்தல்

**மதுரை, மே. 21. சென்னைக்கும்-பெங்களூருக்கும் இடையே நேரடி விமானப் போக்குவரத்து விரைவில் ஏற்பட வேண்டும் என்று அமைச்சர் ஆர். எம். வீ. வலியுறுத்தியிருக்கிறார்.**

மதுரை வந்த சுற்றுலாத்துறை அமைச்சர் ஆர். எம். வீ இன்று காலை நிருபர்களிடம் பேசுகையில் கூறியதாவது

சென்னையிலிருந்து தற்போது பெங்களூருக்கு விமானப் போக்குவரத்து மதுரை, கோவை ஆகிய நகரங்கள் மூலம் நடைபெற்று வருகிறது சென்னையில் இருந்து கிளம்பும் விமானம் மதுரை மற்றும் கோயம்புத்தூர் சென்றுபின்னர் பெங்களூர் செல்கிறது இதனால் பெங்களூர் செல்லும் பயணிகள் சென்னையில் இருந்து சுற்றிக்கொண்டு செல்ல நேரிடுகிறது பயணிகள் நீண்ட நேரம் பயணம் செய்வதால் களைப்படைந்து வசதியற்று பயணம் செய்யவேண்டியிருக்கிறது.

சென்னையில் இருந்து மதுரை பின்னர் கோவை அதன் பின்னர் பெங்களூர் இப்படி விமானப் போக்குவரத்து சுற்றிக் கொண்டு செல்வதால் இந்த 4 நகரங்களுக்கும் இடையேஒருதொடர்புஏற்பட்டாலும் பயணிகளின் வசதிக்கேற்ப சென்னைக்கும் பெங்களூருக்கும் இடையே நேரிடை விமானப்போக்குவரத்து ஏற்படவேண்டும்.

சென்னையில் இருந்து பெங்களூர்செல்லும்பயணிகள் நேரடியாக விமானம் மூலம் பெங்களூர் செல்லவும் பெங்களூரில் இருந்து நேராக சென்னை வரவும் வசதிகள் செய்ய வேண்டும்.

சென்னைக்கும் பெங்களூருக்கும் இடையே நேரடியாக விமானம் விடப்படவேண்டும்.

இவ்வாறு அமைச்சர் ஆர். எம் வீ. கூறினார்.

---

மருத்துவமனையில் போத்தனூரா

## மணிமாறனை பாவலர் முத்துசாமி நலம் விசாரித்தார்

சென்னை, மே 21— தலைமைக் கழகப் பேச்சாளர் போத்தனூரா மணிமாறன் உடல்நலக்குறைவு காரணமாக பி. எஸ். மருத்துவ மனையில் சிகிச்சை பெற்று வருகிறார்.

தமிழ்நாடு திட்டக்குழு துணைத்தலைவர்பாவலர் முத்துசாமி அந்தமருத்துவ மனைக்குச் சென்று உடல் நலம் விசாரித்தார்.

---

பெரியகுளம்

## மார்க்சிஸ்ட் கட்சியினர் 50 பேர் கழகத்தில் இணைந்தனர்

பெரியகுளம், மே. 21- பெரியகுளம் நகராட்சியில் பணியாற்றும் 50 துப்புரவு தொழிலாளர்கள் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியிலிருந்து விலகி கழகத்தில் இணைந்தனர்.

பெரியகுளம் நகர கழக செயலாளர் என். நல்லவேலுச்சாமி முன்னிலையில் மண்டையன், ஆறுமுகம், மாரியப்பன், ரெங்கன் ஆகியோர் தலைமையில் இவர்கள் கழகத்தில் இணைந்தனர்.

---

## இந்தியா தயாரிக்கும் இன்சாட் செயற்கை கோள்

பெங்களூர், மே. 21- இந்தியா தனது சொந்தப் பொறுப்பில் இன்சாட்-2 என்ற செயற்கைக்கோளை தயாரிக்கிறது.

இதற்கான ஆரம்பப் பணிகள் துவக்கப்பட்டுள்ளன.

இந்த செயற்கைக் கோள் 1988-89ம் ஆண்டில்செலுத்தப்படலாம்

இந்த செயற்கைகோள் டி.வி வானொலி வசதிகளை விஸ்தரிக்க பெரிசும் உதவும் என்று இந்திய விண்வெளி ஆராய்ச்சி நிறுவன இயக்குநர் டாக்டர் யு. ஆர். ராவ் தெரிவித்தார்.

---

## மத்திய அமைச்சர் கண்டிப்பு

# சுயவேலை வாய்ப்பு திட்ட கடனுக்கு ஜாமீன் தேவையில்லை

**மதுரை. மே. 21- சுயவேலை வாய்ப்புதிட்டத்தின் கீழ் 5 ஆயிரம் ரூபாய் வரை தரப்படும் கடனுக்கு தேசிய மயமாக்கப்பட்ட வங்கிகள் சொத்து ஜாமீன் அல்லது நபர் ஜாமீன் கேட்கக்கூடாது என்று மத்திய அமைச்சர் ஜனார்த்தன்பூஜாரி கூறினார்.**

பிரதமரின் 20 அம்ச திட்டத்தின் கீழ் சுய வேலை வாய்ப்பு பெற தேசிய மயமாக்கப்பட்ட வங்கிகள் கடனுதவி தர வேண்டும் அப்படி கடன் உதவி அளிக்கும்போது அதற்கு சொத்து ஜாமீனோ அல்லது நபர் ஜாமீனோ கேட்கக் கூடாது என்று உத்திர விடப்பட்டது.

இவ்வாறு கடனுதவி தரப்பட்டால் கொடுத்த கடன் திரும்பிவராதே என்று வங்கி மேலதிகாரிகள் முதலில் தயங்கினர்.

பெரும் பணக்காரர்கள் எல்லாம் கூட பணம் வாங்கித் தின்றுவிட்டு ஏப்பம் விடுகிறார்கள். என்று ஆளும் கட்சியினர் தரப்பில் கூறப்பட்டுள்ளது.

பின்னர் ஒருவழியாக சம்மதித்த தேசியமயமாக்கப்பட்ட வங்கிகள் தமிழ் நாட்டில் பிரதமரின் 20 அம்ச திட்டத்தின் கீழ் சுய வேலை வாய்ப்புக்காக பலஆயிரம் பேருக்கு கோடிக்கணக்கான ரூபாய் கடனை வழங்கின.

நேற்று 4 ஆயிரத்து 762 பேருக்கு 1 கோடியே 15 லட்சத்து 75 ஆயிரம் ரூபாய்க்கு கடனுதவிகளை மத்திய துணை நிதியமைச்சர் ஜனார்த்தன்பூஜாரி வழங்கினார்.

பின்னர் அவர் பேசுகையில் சுயவேலை வாய்ப்புத் திட்டத்தின் கீழ் வழங்கப்படும் 5 ஆயிரம் ரூபாய் வரையிலான கடனுதவிக்கு சொத்து ஜாமீன் அல்லது நபர் ஜாமீனை வற்புறுத்த வேண்டாம் என்று கேட்டுக் கொண்டார்.

பிரதமரின் 20 அம்ச திட்டத்தின் கீழ் நலிந்த பிரிவினருக்கு வழங்கப்படும் இத்தகைய கடனுதவிகளுக்கு சொத்து ஜாமீன் அல்லதுநபர்ஜாமீன் கேட்பது ரிசர்வ் பாங்கின் கோட்பாடுகளுக்குமுரணானது என்றும் அமைச்சர் ஜனார்த்தன் பூஜாரி குறிப்பிட்டார்.

19 வங்கிகள் மேற் சொன்ன கடனுதவிகளை வழங்கியுள்ளன.

---

சுப்ரீம்கோர்ட் தலைமை நீதிபதி

## சந்திரசூட் துணைவியாருடன் மதுரை வருகை

**மதுரை, மே. 21- சுப்ரீம்கோர்ட் தலைமை நீதிபதி சந்திரசூட் தமது துணைவியாருடன் நேற்று மதுரை வந்தார்.**

சுப்ரீம் கோர்ட்தலைமை நீதிபதி ஒய்.வி.சந்திரசூட் மதுரை அருகே உள்ள கொடைக்கானலில் 10 நாட்கள் தங்கிஓய்வுஎடுக்க வந்துள்ளார் அவரது துணைவியாருடன் மதுரை வந்து சேர்ந்தார்.

தமிழகத்தில் 10 நாட்கள் அவர் தங்கி ஓய்வு எடுக்கிறார்.

அவருடன் சென்னை உயர்நீதிமன்ற நீதிபதி ராமானுஜமும் வந்தார்.

மதுரை விமான நிலையத்தில் சுப்ரீம் கோர்ட் நீதிபதி சந்திரசூடை மதுரை மாவட்ட ஆட்சித் தலைவர் சந்திரலேகா, மதுரை, மற்றும் முகவை மாவட்டங்களைச் சேர்ந்த நீதிபதிகள் வரவேற்றனர்.

மதுரை வந்த சந்திரசூடும், அவரது துணைவியாரும் கொடைக்கானலுக்கு புறப்பட்டனர் அங்குஅவர்கள் 10நாட்கள் தங்கிஓய்வு எடுக்கின்றனர்

---

## கேரளாவில் 3தொகுதிகளில் வாக்குப்பதிவு

திருவனந்தபுரம்,மே 21 கேரளாவில் மஞ்சேரி, புனலூர், பரூர் ஆகிய தொகுதிகளில் இன்று காலை வாக்குப்பதிவு நடக்கது.

மஞ்சேரி தொகுதி உறுப்பினராக இருந்த கேரள துணை முதல்வர் சி. எச் முகமது கோயா, புனலூர் தொகுதி உறுப்பினராக இருந்த சாம்ஓமன் ஆகியோர் திடீர் மரணம் அடைந்ததையொட்டி அத்தொகுதிகளுக்கு இடைத்தேர்தல் நடத்த உத்தரவிடப்பட்டது.

1982 ம் ஆண்டில் நடந்த பொதுத் தேர்தலின் போது பரூர் தொகுதியில் முதன் முதலாக 50 வாக்குச் சாவடிகளில் எலக்ட்ரானிக் வாக்குப்பதிவு யந்திரங்கள் பயன்படுத்தப் பட்டன.

எலக்ட்ரானிக் வாக்குப் பதிவு யந்திரங்கள் பயன் படுத்தப்பட்ட பகுதிகளில் மட்டும் மறுவாக்குப்பதிவு நடத்த சுப்ரீம் கோர்ட் உத்தரவிட்டது.

அதன்படி அப்பகுதிகளில் மட்டும் இன்று மறு தேர்தல் நடைபெற்றது.

---

## உ. பியில் மேனகா கட்சி முன்னணி

லக்னோ. மே 21- உத்தரப்பிரதேசத்தில் மாலியாபாத் தொகுதிக்கு நடந்த சட்டமன்ற இடைதேர்தலில் மேனகா கட்சி வேட்பாளர் பிரிஜ்லால் தன்னை எதிர்த்து போட்டியிட்ட இந்திரா காங்கிரஸ் வேட்பாளர் சாந்திகுரீலை காட்டிலும் 2 ஆயிரத்து 290 வாக்குகள் அதிகம் பெற்று முன்னணியில் இருந்தார்.

இரண்டு சுற்று வாக்குகள் எண்ணிக்கை முடிந்த போது இந்த நிலை காணப்பட்டது.

### ராஜஸ்தான்

ராஜஸ்தான் மாநிலத்தில் தனகாளி சட்டமன்ற தொகுதிக்கு நடந்த இடைத்தேர்தலில் ஓட்டு எண்ணிக்கை இன்று காலை ஆள்வார் என்னும் இடத்தில் தொடங்கியது.

3-வது சுற்று ஓட்டு எண்ணிக்கை முடிந்த போது பாரதீய ஜனதா கட்சி வேட்பாளர் சிவ நாராயணன் தன்னை எதிர்த்து போட்டியிட்ட இந்திரா காங்கிரஸ் வேட்பாளர் துனிலாலைவிட சற்று கூடுதல் வாக்குகள் பெற்று முன்னணிநிலையில் இருந்தார்.

---

ஆந்திர மாநிலம்

## ஆசிப்நகர் கலவரத்தில் 4பேர் சாவு

**ஐதராபாத், மே 21- ஆந்திராவில் ஆசிப்நகர் தொகுதியில் நேற்று வாக்குப்பதிவு நடந்தபோது ஏற்பட்ட கலவரத்தில் உயிர் இழந்தவர்களின் எண்ணிக்கை 4 ஆக உயர்ந்துள்ளது.**

ஆசிப்நகர் தொகுதியில் நேற்று வாக்குப்பதிவு நடந்தபோது மஜ்லிஸ் கட்சி ஆதரவாளர்கள் ஓட்டு போடுவதற்காக ஒரு வேனில் வந்தனர். அதனை தெலுங்கு தேச கட்சி தொண்டர்கள் ஆட்சேபித்தனர். இதைத் தொடர்ந்து மோதல் ஏற்பட்டது.

இந்தமோதலில் கத்தியால் குத்தப்பட்டஇருவர் அந்த இடத்தில் செத்தனர்.

மற்றும் கத்திக்குத்து காயங்களுடன் 33 பேர் உஸ்மானியா பொது மருத்துவமனையில் அனுமதிக்கப்பட்டனர். அங்கு நேற்றிரவு 2 பேர் பரிதாபமாகச் செத்தனர்

ஆஸ்பத்திரியில் இன்னும் 13 பேருக்கு கத்திக்குத்து காயங்களுக்கு சிகிச்சை அளிக்கப்பட்டு வருகிறது. முன்னெச்சரிக்கை [illegible] நடவடிக்கையாக ஐதராபாத்திலும் ஆசிப்நகர் தொகுதியில் சிலபகுதிகளிலும் இன்று காலை ஊரடங்கு உத்தரவு பிறப்பிக்கப்பட்டதாக போலீஸ் கமிஷனர் கே.விஜயராமா ராவ் கூறினார்.

---

சேலத்தில் பஸ் - வேன்மோதல்

## பள்ளிமாணவர் 18 பேர் சாவு: 19 பேர் காயம்

### சிகிச்சை நடவடிக்கைக்கு முதல்வர் புரட்சித்தலைவர் அவசர உத்தரவு

**சேலம், மே, 21- வேன்- பஸ் மோதிக் கொண்டதில் 18 பேர் மரணம் அடைந்தனர் 19 பேர் காயம் அடைந்தனர் இந்த விபத்தில் காயம் அடைந்தவர்களுக்கு சிகிச்சை அளிக்க சென்னையிலிருந்து டாக்டர்கள் சென்றுள்ளனர்.**

சேலம்மாவட்டம்ஓமலூர் அருகே ஒரு வேனும் பஸ்சும் மோதிக்கொண்டதில் சுற்றுலா சென்றமாணவர் மாணவியர் உள்பட 18 பேர் பலியானார்கள் 19 பேர் காயம் அடைந்தனர்.

விபத்து பற்றிய தகவல் கிடைத்ததும் சேலம் மாவட்ட கலெக்டர் வரதராஜுலு விபத்து நடந்த இடத்திற்கு சென்று பார்வையிட்டார் காயம் அடைந்தவர்களுக்கு உடனடி சிகிச்சை அளிக்க ஏற்பாடு செய்தார்.

விபத்து பற்றிய விவரங்கள் முதல்வர் புரட்சித் தலைவருக்கு தெரிவிக்கப்பட்டது அதைக் கேட்டதும் முதல்வர் புரட்சித் தலைவர் அதிர்ச்சியடைந்தார்

விபத்தில் காயமடைந்தவர்களுக்கு தேவையான சிகிச்சை அளிக்க எல்லா வசதிகளையும் செய்யும்படி முதல்வர் புரட்சித்தலைவர் உத்தரவிட்டார்.

காயம் அடைந்தவர்களுக்கு தீவிர சிகிச்சையளிக்க சென்னையிலிருந்து டாக்டர்கள் குழுவை உடனடியாக சேலம் அனுப்பி வைத்தார்.

---

## மின்வாரிய தலைமை அலுவலகத்தில் "டாப்கோ" கேன்டீன்

சென்னை, மே 21— சென்னை அண்ணா சாலையில் உள்ள தமிழ்நாடு மின்சாரவாரிய தலைமை அலுவலகத்தில் "டாப்கோ" சிற்றுண்டி பகுதியைத் துவக்கப்பட்டுள்ளது.

"டாப்கோ" நிறுவன தலைவர் கல்யாணி ராமசாமி இந்த சிற்றுண்டி விடுதி திறந்து வைத்தார் முட்டை மற்றும் கோழி இறைச்சிப் பண்டங்கள் [illegible] இந்தக் கேன்டீனில் கிடைக்கும்.

---

மகாராஷ்டிராவில்

## வகுப்புக் கலவரம்: பாதிப்பு பகுதிகளில் பிரதமர் இந்திரா

**பம்பாய். மே. 21- மகாராஷ்டிர மாநிலத்தில் வகுப்பு கலவரத்தால் பாதிக்கப்பட்ட பகுதிகளுக்கு பிரதமர் இந்திரா காந்தி சென்று நிலவரத்தை நேரில் கண்டறிந்தார்.**

மகாராஷ்டிர மாநிலம் பம்பாய்அருகே பிவாண்டி தானே பகுதிகளில் வகுப்புக்கலவரம் நடந்ததும் ஏராளமான மக்கள் பாதிக்கப்பட்டதும் தெரிந்ததே. சுமார் ஆயிரத்துக்கு மேற்பட்ட வீடுகள் தீக்கிரையாயின வாகனங்கள் கடைகள் சேதம் அடைந்தன.

இதுவரை 85 பேர் இந்தக் கலவரத்தில் உயிரிழந்தனர். ஒரு போலீஸ் துணை இன்ஸ்பெக்டரும் கத்திக்குத்துக்கு ஆளாகி மாண்டார். பலர் வீடிழந்து மண்டபங்களிலும் பள்ளிகளிலும் வைக்கப்பட்டுள்ளனர் ஏராளமான பேர் காயம் அடைந்தனர். கலவரத்தை அடக்க போலீசார் தீவிர நடவடிக்கைகளை எடுத்தனர்.

இதற்கிடையே மத்திய உள்துறை அமைச்சர் பி. சி. சேத்தி நேற்று பம்பாய்க்கு விரைந்து வந்தார்.

கலவரப் பகுதிகளை அவர் பார்வையிட்டார்.

இன்று காலை 9-55 மணிக்கு பிரதமர்இந்திரா காந்தி விமானம் மூலம் பம்பாய் வந்துசேர்ந்தார். அவருடன் ராஜீவ் காந்தி எம். பி யும் வந்தார்,

பம்பாயில் இருந்து உடனடியாக பிரதமரும் ராஜீவ்காந்தியும் ஹெலிகாப்டர் விமானத்தில் கலவரப் பகுதிகளுக்கு பயணமானார்கள்.

அவருடன் மத்திய நீர்ப்பாசன துணை அமைச்சர் அன்சாரி, மகாராஷ்டிர மாநில ஆளுனர் இத்ரிஸ் லத்தீப், முதல் அமைச்சர் வசந்ததாதாபட்டீல் ஆகியோர்களும் ஹெலிகாப்டர் விமானத்தில் சென்றனர்.

பிரதமர் இந்திராகாந்தி கலவரப்பகுதிகளுக்குச் சென்று பார்வையிடுகிறார் நிலைமையை அவர் நேரில் கண்டறிவார்.

தானே, பிவாண்டி ஆகிய பகுதிகளில் நிலைமை கட்டுக்கடங்கி விட்டது. பந்தோபஸ்து ஏற்பாடுகள் தீவிரப் படுத்தப்பட்டுள்ளன என்று போலீசார் தெரிவித்தனர்.

---

## மறைவு

சென்னை, மே 21— சென்னை பூங்கா நகர் தொகுதி கழக அவைத் தலைவர் என். என். குப்புசாமியின் மாமனார் சுப்பையாசெட்டி நேற்று இரவு 20-5-84 காலமானார் அவருக்கு வயது 65

அன்னாரின் இறுதி ஊர்வலம் இன்று நடந்தது

கழக தோழர்கள் கலந்து கொண்டு பெரியவருக்கு அஞ்சலி செலுத்தினர்.

# மதுரை மத்திய-வங்கி நிர்வாகிகள் தேர்வு

மதுரை, மே 21- மதுரை மாவட்ட மத்திய கூட்டுறவு வங்கி அண்ணா தொழிலாளர் சங்கக் கூட்டம் மதுரையில் நடைபெற்றது.

முன்னாள் எம்.எல்.ஏ வெ. பாலகுரு தலைவராகவும், டி.எஸ்.கிருஷ்ணன் உபதலைவராகவும் வி. கந்தசாமி பொதுச் செயலாளராகவும், ஆர்.எம். பொன்னுசாமி பொருளாளராகவும் பரமசிவம் துணைப் பொருளாளராகவும் வி. சிவசுப்ரமணியம் வி. கனகசபாபதி ஆகியோர் இணைச் செயலாளராகவும் மற்றும் 8 பேர் நிர்வாக உறுப்பினர்களாகவும் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

# மார்க்சிஸ்ட் கட்சியினர் 75 பேர் கழகத்தில் இணைந்தனர்

தஞ்சாவூர், மே 21- நாகை ஒன்றியம் கீழையூர் கிளைக் கழக பொதுக் கூட்டம் சேசர் தலைமையில் பால்ராஜ் முன்னிலையில் நடைபெற்றது.

நாகை பின்னன் கழகக் கொடியை பல்வேறு இடங்களில் ஏற்றி வைத்தார்.

அப்போது வெண்மனச்சேரியைச் சேர்ந்த 75 மார்க்சிஸ்ட் கட்சியினர் அந்த கட்சியில் இருந்து விலகி கழகத்தில் இணைந்தனர்.

கவிஞர் உதயகுமார், நாகை பின்னன், வெங்கடாசலம், முருகேசன் ஆகியோர் முன்னிலையில் அவர்கள் கழகத்தில் இணைந்தனர்.

## திருமணம்

அய்யம்பட்டினப் சேர்ந்த அர. தனக்கோடியின் மகன் குணசேகரனுக்கும் பாம்புலுப்பட்டியைச் சேர்ந்த அர. கிச்சம நாயக்கர் மகள் அரங்க நாயகிக்கும் வரும் 25-5-84 வெள்ளிக்கிழமை காலை 9 மணிக்கு மேல் திண்டுக்கல் அங்கு விலாஸ் திருமண மண்டபத்தில் திருமணம் நடைபெறவிருக்கிறது.

மருத்துவக் கல்லூரி

# மாணவி கொலை இருவர் கைது

**சென்னை, மே. 21- சென்னை அண்ணா நகரில் மருத்துவ கல்லூரி மாணவி ஒருவர் கற்பழித்து கழுத்தை நெரித்து கொலை செய்யப்பட்டார் இது தொடர்பாக இருவர் கைது செய்யப்பட்டனர்.**

சென்னை அண்ணா நகரில் எச் பிளாக்கில் வசித்துவருபவர் மாலா (வயது 22) இவர் ஒரு மருத்துவக் கல்லூரியில் 3-ஆம் ஆண்டுபடித்துவருகிறார்.

இவருக்கு நிறைய ஆண் நண்பர்கள் இருந்ததாக தெரிகிறது. மேலும் அவர் போதை பொருட்களை அதிகம் சாப்பிடுவார் என்றும் கூறப்படுகிறது.

நேற்று முன்தினம் மாலை 6 மணி அளவில் மாலா வீட்டில் தனியாக இருந்திருக்கிறார் அப்போது இரண்டு வாலிபர்கள் அவர் வீட்டிற்கு சென்று நாங்கள் எலக்ட்ரிஷியன்கள் உங்க வீட்டில் ஏதாவது ரிப்பேர் செய்ய வேண்டுமோ என்று கேட்டனராம்.

அதற்கு மாலா எங்கள் வீட்டில் ஏதும் ரிப்பேர் இல்லை என்று கூறினார் உடனே ஒருவர் திடீரென்று வீட்டிற்கு உள்ளே புகுந்து மாலாவின் வாயை அமுக்கி அருகில் இருந்த அறைக்கு இழுத்துச் சென்றுவாயில் துணியை வைத்து அடைத்தனராம்.

மாலா எவ்வளவோ தப்பிக்க முயன்றும் முடியவில்லை. பின்னர் அவர்கள் இருவரும் மாலாவை மாறி, மாறி கற்பழித்தனர். பின்னர் அங்கிருந்த ஒரு நய்லான் கயிற்றால் மாலாவின் கழுத்தை இறுக்கி கொலை செய்தனராம்.

பின்னர் அவர்கள் இருவரும் வீட்டை உள்பக்கமாக பூட்டிக் கொண்டனர். பக்கத்து வீட்டில இருந்தவர்கள் அந்த வீட்டில ஏற்பட்ட அலறல் சத்தம் கேட்டு அங்கு தேர்தல் பாதுகாப்பிற்காக இருந்த போலீசாரிடம் தெரிவித்தனர். இது குறித்து போலீசார் அண்ணாநகர் போலீசுக்கு தெரிவித்தனர் உடனே துணைக்கமிஷனர் பாலசந்திரன் உதவி கமிஷனர் ராமநாதன் ஆகியோர் அந்த இடத்திற்கு விரைந்து சென்று பார்த்தனர். வீடு உள்பக்கமாக பூட்டியிருந்ததால் கதவை உடைத்து உள்ளே சென்றனர். அங்கு மாலா கொலை செய்யப்பட்ட நிலையில் பாத்ரூமில் கிடந்தாள். உள்ளே பதுங்கியிருந்த அந்த இருவரையும் போலீசார் பாய்ந்து பிடித்தனர், விசாரணையில் ஒருவர் பெயர் நாகராஜன் என்றும் அவர் அந்த வீட்டின் சமையல்காரர் என்றும் தெரியவந்தது மற்றொருவர் பெயர் வெங்கடேசன் இவர் ஒரு எலெக்ட்ரிஷியன் இவர் நாகராஜனின் நண்பர் என்றும் தெரியவந்தது. இருவரையும் போலீசார் கைது செய்து விசாரணை நடத்திவருகின்றனர்.

பெரியவர்

# டி. எம். பார்த்தசாரதி மரணம்: கே. ஏ. கே.- சீதாபதி அஞ்சலி

சென்னை, மே. 21- திராவிட இயக்கத்தின் தூண்களில் ஒருவரும், அறிஞர் அண்ணாவின் நெருங்கிய நண்பருமான பெரியவர் டி. எம். பார்த்தசாரதி உடல்நலக் குறைவு காரணமாக காலமானார்.

அவரது உடலுக்கு அமைச்சர் கே.ஏ.கே. மலர்வளையம் வைத்து அஞ்சலி செலுத்தினார்.

முதல்வர் புரட்சித் தலைவர் சார்பிலும் கழகத்தின் சார்பிலும் ஆர்.டி. சீத்தாபதி எம்.எல், சி மலர்வளையம் வைத்து இறுதி மரியாதை செலுத்தினார். மறைந்த பெரியவர் டி.எம் பார்த்தசாரதி குடும்பத்தாருக்கு ஆறுதல் கூறினார்.

ஆர். டி. சீத்தாபதியுடன் புரசைவாக்கம் பொறுப்பாளர் ஜார்ஜ் சென்றார்.

புதுக்கோட்டை மாவட்டம்

# விதவைகளின் குழந்தைகளுக்கு இலவச பாடப்புத்தகம்

## 1ம் வகுப்பு முதல் பிளஸ்2 வரை

**புதுக்கோட்டை மே 21- புதுக்கோட்டை மாவட்டத்தில் உள்ள பள்ளிகளில் படிக்கும் ஏழை விதவைகளின் பிள்ளைகளுக்கு இலவசமாக பாடப்புத்தகங்கள் வழங்கப்படும் என்று அறிவிக்கப்பட்டுள்ளது.**

தமிழகத்தில் உள்ள ஏழை எளியமக்கள் பொருளாதாரத்தில் முன்னேற்றம் அடைவதற்கான பல்வேறு திட்டங்களை புரட்சித்தலைவர் அரசு செயல்படுத்தி வருகிறது. கல்வித்துறைக்காக அதிக பணத்தைஒதுக்கி மாணவ மாணவியருக்கு சலுகைகள் அளித்துவருகிறது.

புதுக்கோட்டை மாவட்டத்தில் உள்ளபள்ளிகளில் 1ஆம் வகுப்புமுதல் 12வது வகுப்பு வரை (+ 2) படிக்கும் ஏழை எளிய விதவைகளின் பிள்ளைகளுக்கு இலவசமாக பாடப்புத்தகங்கள் மற்றும் குறிப்பேடுகள் வழங்கப்படும், என்று புதுக்கோட்டை மாவட்ட ஆட்சித்தலைவர் இரா. கற்பூரசுந்தரபாண்டியன் அறிவித்திருக்கிறார்- 1984- 85 ஆம் ஆண்டிற்கான இந்தப் பாடபுத்தகங்கள் குறிப்பேடுகள் ஆகியவை மாவட்ட சமூகநலத்துறை மூலம் வழங்கப்படும். ஆண்டு வருமானம் ரூ. 3 ஆயிரத்துக்குட்பட்ட குடும்பத்தைச் சேர்ந்த பிள்ளைகளுக்கு இந்தச் சலுகை அளிக்கப்படும்

இந்தச் சலுகைகளைப் பெற விரும்பும் மாணவ மாணவியர் கல்வித் தகுதி வயது குடும்பத்தின் வருமானம்முதலியவற்றிற்கான சான்றிதழ்களுடன் சம்பந்தப்பட்ட தலைமை ஆசிரியர்மூலம் 10-6-84க்குள் விண்ணப்பிக்க கேரப்படுகிறார்கள். விண்ணப்பபாரங்கள் புதுக்கோட்டை மாவட்ட சமூகநலத்துறை அலுவலகத்தில இருந்து பெற்றுக்கொள்ளலாம்,

மாவட்ட ஆட்சிததலைவர் கற்பூர சுந்தரபாண்டியன் இத்தகவலைத் தெரிவித்துள்ளார்.

மாமல்லபுரத்தில்

# திறந்தவெளி அருங் காட்சியகம்

சென்னை, மே 21- மாமல்லபுரத்தில் ரூ 30 லட்சம்செலவில் 30ஏக்கர் நிலப்பரப்பில் திறந்தவெளி அருங்காட்சியகம் ஒன்று அமையவிருக்கிறது

தமிழ்நாடு சிற்பக்கலைக் கல்லூரி முதல்வர் கணபதிஸ்தபதி சென்னையில் நிருபர்களிடம் இத்தகவலைத் தெரிவித்தார். மாமல்லபுரத்தை மேம்படுத்த சுற்றுலாத்துறையும் ஒரு பெரிய திட்டமொன்றை தயாரித்துவருகிறது.

# சொந்த ஊர் திரும்பிய ஆலன்: ஏராளமானவர்கள் வரவேற்பு

கிளீவ்லாந்து, மே 21— சொந்த ஊருக்கு திரும்பிய ஆலன் தம்பதிகளுக்கு உறவினர்களும், நண்பர்களும்சிறப்பானவரவேற்பு அளித்தனர்.

இலங்கையில் என்ஜினியராக பணிபுரிந்துகொண்டிருந்த அமெரிக்கர் ஆலனையும் அவரது மனைவி மேரியையும் தமிழ் தீவிரவாதிகள் கடந்த 10ந்தேதி கடத்திச் சென்றதும், ஆனால் பிரதமர் இந்திராகாந்தி முதல்வர்புரட்சித்தலைவர் ஆகியோரின் வேண்டுகோளுக்கு இணங்கி அமெரிக்க தம்பதியரை தீவிரவாதிகள் விடுதலை செய்ததும் தெரிந்ததே.

ஆலன் தம்பதியர் அமெரிக்காவில ஒகியோ மாகாணத்தைச் சேர்ந்தஸ்டோல் நகரைச் சேர்ந்தவர்கள்.

தங்கள் சொந்த ஊருக்கு திரும்பிய அவர்களுக்கு உறவினர்களும், நண்பர்களும் உற்சாக வரவேற்பு அளித்தனர் மரங்களிலும் தொலைபேசி பூத்துகளிலும் மஞ்சள் வண்ண ரிப்பன்களை தோரணங்களாக தொங்கவிட்டனர்; வரவேற்பு வாசகங்களை எழுதி வைத்தனர்.

நிருபர்களுக்கு அளித்த ஒரு பேட்டியில் 'எங்களை கடத்திச்சென்றவர்கள் எங்களிடம் அன்பாக நடந்துகொண்டார்கள்'' என்று ஆலன் மனைவி மேரி கூறினார்.

25ம் தேதியன்று

# தென்மாநில சுகாதார அமைச்சர்கள் மாநாடு

சென்னை, மே 21— தென் மாநில சுகாதார அமைச்சர்கள் மாநாடு இம் மாதம் 25, 26 தேதிகளில் சென்னையில் நடைபெறுகிறது.

தமிழ்நாடு, ஆந்திரம், கர்நாடகம், கேரளம், ஆகிய மாநிலங்களும், புதுவையும் அந்தமாநாட்டில் கலந்துகொள்கின்றன.

# பெரியார் மாவட்டம் 1984-85 கலால் ஆண்டிற்கான கள் சில்லறை விற்பனை ஏல அறிவிப்பு

1981-ம் ஆண்டு தமிழ்நாடு கள் சாராயக்கடைகள் [ஏல விற்பனை] விதி 5-ன்படி கலால் ஆண்டு 1984-85க்கு 16-7-84 முதல் 30-9-85 முடிய பெரியார் மாவட்டத்திற்கு அங்கீகரிக்கப்பட்டுள்ள கள்ளுக்கடைகள் கீழே குறிப்பிட்டுள்ள விற்பனை அலுவலர்களால் சம்பந்தப்பட்ட வருவாய் வட்டாட்சியர் அலுவலகங்களில் அதன் நேரே குறிப்பிட்ட நாட்களில குறிப்பிட்ட நேரத்தில் ஏலம் விடப்படும்.

| வ. எண் 1 | வட்டத்தின் பெயர் 2 | விற்பனை அலுவலர் விபரம் 3 | ஏலம் விடப்படும் இடம் 4 | ஏலம் விடப்படும் நாளும், நேரமும் 5 | ஏல விற்பனைக்குரிய கள்ளுக்கடைகளின் விபரம் 6 |
|---|---|---|---|---|---|
| 1. | ஈரோடு | சார் ஆட்சியர், ஈரோடு. | வருவாய் வட்டாட்சியர் அலுவலகம் ஈரோடு. | 31-5-84 காலை 10 மணி | கள்ளுக் கடை எண் 1 முதல் 40 வரை |
| | | | | 1-6-84 காலை 10 மணி | கள்ளுக் கடை எண் 41 முதல் 74 வரை |
| 2. | பெருந்துறை | மாவட்ட விநியோக அலுவலர் ஈரோடு. | வருவாய் வட்டாட்சியர் அலுவலகம்பெருந்துறை | 1-6-84 காலை 10 மணி | கள்ளுக்கடை எண் 1 முதல் 40 வரை |
| | | | | 2-6-84 காலை 10 மணி | கள்ளுக்கடை எண் 41 முதல் 74 வரை |
| 3. | கோபிசெட்டி பாளையம் | வருவாய் கோட்டாட்சி அலுவலர், கோபிசெட்டி பாளையம். | வருவாய்வட்டாட்சியர் அலுவலகம், கோபி செட்டிபாளையம். | 31-5-84 காலை 10 மணி | கள்ளுக்கடை எண் 1 முதல் 38 வரை |
| | | | | 1-6-84 காலை 10 மணி | கள்ளுக் கடை எண் 39 முதல் 70 வரை |
| | | | | 2-6-84 காலை 10 மணி | கள்ளுக் கடை எண் 71 முதல் 98 வரை |
| 4. | பவானி | மாவட்ட ஆட்சியரின் நேர்முக உதவியாளர் (பொது) ஈரோடு. | வருவாய் வட்டாட்சியர் அலுவலகம், பவானி. | 31-5 84 காலை 10 மணி | கள்ளுக் கடை எண் 1 முதல் 40 வரை |
| | | | | 1-6-84 காலை 10 மணி | கள்ளுக் கடை எண் 41 முதல் 80 வரை |
| 5. | சத்தியமங்கலம் | மாவட்ட ஆதிதிராவிடர் மற்றும் பழங்குடி நல அலுவலர், ஈரோடு. | வருவாய் வட்டாட்சியர் அலுவலகம், சத்தியமங்கலம். | 1-6-84 காலை 10 மணி | கள்ளுக் கடை எண் 1 முதல் 30 வரை |
| | | | | 2-6-84 காலை 10 மணி | கள்ளுக் கடை எண் 31 முதல் 59 வரை |
| 6. | தாராபுரம் | வருவாய் கோட்டாட்சி அலுவலர், தாராபுரம். | வருவாய் வட்டாட்சியர் அலுவலகம் தாராபுரம். | 1-6-84 காலை 10 மணி | கள்ளுக் கடை எண் 1 முதல் 36 வரை |
| | | | | 2-6-84 காலை 10 மணி | கள்ளுக் கடை எண் 37 முதல் 71 வரை |
| 7. | காங்கயம் | மாவட்ட பிற்படுத்தப்பட்டோர் நல அலுவலர், ஈரோடு. | வருவாய் வட்டாட்சியர் அலுவலகம், காங்கயம். | 31-5-84 காலை 10 மணி | கள்ளுக் கடை எண் 1 முதல் 26 வரை |
| | | | | 1-6-84 காலை 10 மணி | கள்ளுக் கடை எண் 27 முதல் 51 வரை |

1. ஏலம் கோர விரும்புபவர் ஏலம் தொடங்குவதற்கு முன்னதாக அச்சாரத் தொகை ரூ. 1000- (ரூபாய் ஆயிரம் மட்டும்) செலுத்தவேண்டும்.

2. ஏலம் கோருபவர் சம்சந்தப்பட்ட வருவாய் வட்டாட்சியரால் வழங்கப்பட்ட சொத்து மதிப்பு சான்றிதழை கட்டாயமாக தாக்கல் செய்யவேண்டும். சொத்து மதிப்பு சான்றிதழுக்குப் பதிலாக தேசியமயமாக்கப்பட்ட வங்கியின் உத்திரவாதத்தையும் தாக்கல் செய்யலாம். அல்லது ரொக்கமாகவும் தொகையை செலுத்தலாம். ஏலதாரர் டி சொத்து மதிப்பு அத்தாட்சி அல்லது வங்கி உத்திரவாதம் அல்லது ரொக்கத் தொகை போன்று 2½ [இரண்டரை] மடங்கு அளவிற்கு மேற்படாமல் ஏலம் கேட்க அனுமதிக்கப்படுவர்.

3. மேலும் ஏலம் கோருபவர் சம்பந்தப்பட்ட வருவாய் வட்டாட்சியரால் வழங்கப்பட்ட நிரந்தர குடியிருப்பு சான்றிதழை தாக்கல் செய்யவேண்டும். அவ்வாறு தாக்கல் செய்யவில்லையென்றால் ஏலத்தில் பங்கு கொள்ள அனுமதிக்கப்படமாட்டார்கள்.

4. ஏலம் கோருவதோடு அன்றி கடைகளுக்கு ஒப்பந்தப்புள்ளி (Tender) அனுப்புவதன் மூலமும் விற்பனை உரிமம் பெறலாம். ஏலம் ஆரம்பிக்க நிர்ணயிக்கப்பட்டுள்ள நேரம் வரை ஒப்பந்தப்புள்ளிகள் பெற்றுக்கொள்ளப்படும். ஒப்பந்தப்புள்ளி அனுப்புபவர் அச்சாரத் தொகை ரூ. 1000-க்கு வட்டக் கலால் அலுவலர் பெயரில் டிராப்டும் ஒப்பந்தப்புள்ளியில் கேட்கப்பட்டுள்ள மாதாந்திர குத்தகைத் தொகையில் ½ மாதத் தொகைக்கான டிமாண்ட் டிராப்ட்டையும் இணைத்து அனுப்பவேண்டும். அத்துடன் வட்டாட்சியரிடமிருந்து பெற்றுள்ள சொத்து மதிப்பு சான்றிதழ் அல்லது அதற்கு பதிலாக தேசியமயமாக்கப்பட்ட வங்கி உத்திரவாதத்தையும் அல்லது வங்கியில் தொகையை செலுத்தி டிமாண்ட் டிராப்ட்டையும் அனுப்பலாம் மேலும் வட்டாட்சியரால் வழங்கப்பட்ட நிரந்தர குடியிருப்புச் சான்றிதழையும் தவறாது இணைக்கவேண்டும். மேலும் ஒப்பந்தப்புள்ளியில் கடையை எடுத்துக் கொள்ள இசைந்து குறிப்பிட்ட மாதாந்திரத் தவணைத் தொகையானது ஒப்பந்தக்காரர் இணைத்து அனுப்பும் சொத்து மதிப்பு சான்றிதழ் அல்லது வங்கி உத்திரவாதத்தில் அல்லது வங்கி டிமாண்ட் டிராப்ட்டில் கண்டுள்ள தொகைக்கு 2½ மடங்கிற்கு மேல் இருக்கக்கூடாது.

இந்த ஏலத்திற்கான மற்றுமுள்ள நிபந்தனைகளையும், விபரங்களையும் பெரியார் மாவட்ட அரசிதழ் சிறப்பு வெளியீடு ஆங்கில பதிப்பு எண் 4. - தமிழ் பதிப்பு எண் 6 நாள் 16-5-84ல் காணலாம், தவிரவும் சம்பந்தப்பட்ட வட்டக் கலால் அலுவலரையும் அணுகி வேண்டிய விபரங்களைப் பெறலாம்

பி. வி. ராஜாராமன், இ ஆ ப.,
மாவட்ட ஆட்சியர்,
பெரியார் மாவட்டம்.

ஈரோடு,
நாள்: 16 5 84.

உதகையில்

## மலர்கண்காட்சி கவர்னர் துவக்கினார்

உதகமண்டலம், மே21- உதகமண்டலத்தில் நடைபெறும் 8 வது வருடாந்தர மலர் கண்காட்சியை தமிழக ஆளுனர் குரானா துவக்கி வைத்தார்.

முன்னதாக நீலகிரி மாவட்ட ஆட்சித் தலைவர்குப்தாவரவேற்றுபேசி. ஏார்.டாக்டாஜனார்தனம் எம். எல். சி. உச்சி எம். எல். ஏ. ஆகியோரும் விழாவில் கலந்து கொண்டு பேசினர்.

## தமிழகத்தில் புலிகள் அதிகரிப்பு

சென்னை, மே. 21— தமிழகத்தில் புலிகள் எண்ணிக்கை இப்போது அதிகரித்துள்ளது.

5 ஆண்டுகளுக்கு முன்பு 65 புலிகளாக இருந்தது இப்போது 87 ஆக உயர்ந்துள்ளது.

தமிழ் நாட்டில் உள்ள முதுமலை, ஆனமலை - தாளமலை - மணிமுத்தாறு - ஆகிய நான்கு புலிகள் சரணாலயங்களில் எடுக்கப்பட்ட புலிகள் கணக்கெடுப்பில் இது தெரிய வந்துள்ளது.

சுற்றுலா

## வேன்-லாரி மோதல்: 10 பேர் காயம்

சென்னை, மே. 21 அற்றுலா கோஷ்டி ஒன்று பயணம் செய்த வேனும்-லாரியும் மோதிக்கொண்டதால் ஏற்பட்ட விபத்தில் 10 பேர் காயம் அடைந்தனர்.

இந்த விபத்து நேற்று நள்ளிரவு சென்னை ஓட்டேரி அருகே நடந்தது.

சென்னை தங்கசாலை பகுதி தையல் பள்ளியைச் சேர்ந்தவர்கள் மதுரை, திருச்சி திருவண்ணாமலை முதலிய இடங்களுக்குசென்று சென்னைக்குத் திரும்பிவந்தபோது இந்த விபத்து ஏற்பட்டது

படுகாயம் அடைந்த ராணி (வயது 26) அங்கையற்கண்ணி (57) குமார் (23) ஆகியோர் பொது மருத்துவமனையில் அனுமதிக்கப்பட்டனர்.

மற்றவர்கள் புறநோயாளிகளாக சிகிச்சை அளிக்கப்பட்டனர்.

போக்குவரத்துப் போலீசார் இந்த விபத்து பற்றி விசாரணை செய்து வருகிறார்கள்.

கழகத்தில் இணைந்த

வானூர் பரமசிவம் அறிக்கை:

# ஆதிதிராவிடர்களை அடியோடுபுறக்கணித்த கருணாநிதி

சென்னை. மே 21- ஆதிராவிடர்களின் நலனை அடியோடு புறக்கணித்தவர் கருணாநிதி என. தி.மு க.வைவிட்டு விலகி கழகத்தில் இணைந்த வானூர் பரமசிவம்தெரிவித்துள்ளார்.

தி.மு.கவை விட்டு விலகிகழகத்தில் இணைந்த வானூர் தொகுதி திமுக முன்னாள் எம். எல் ஏ. பரமசிவம் விடுத்துள்ள அறிக்கையொன்றில் தெரிவித்திருப்பதாவது:-

நான் கடந்த 30 ஆண்டுகளாக தி. மு. க. வில் இருந்து, 1977 முதல் 1980 வரை சட்டமன்ற உறுப்பினராகவும் பணியாற்றி உள்ளேன்,

1977 ம் ஆண்டு முதல் தமிழக முதல்வர் ஆற்றி வரும் ஆக்கபூர்வ சமுதாய முன்னேற்ற பணிகள் குறிப்பிடத்தகுந்தது. அவர் சமுதாயத்தில் நலிந்த பிரிவினரான ஆதி திராவிடர் மற்றும் பழங்குடி ஏழை மக்கள் மற்றும் முதியோர் கைம்பெண்கள் போன்றோருக்கு ஆற்றிக் கொண்டிருக்கும் பணிகள் அளவிடற்கரியது.

### கல்வி - வேலை வாய்ப்பு

இவற்றில் குறிப்பிடத்தக்க அம்சம் முதலமைச்சர் குழந்தைகள் சத்துணவுத்திட்டம். தினமும் 70 லட்சம் ஏழைக் குழந்தைகளுக்கு உணவு உடை தருவதுதவிர அனைத்து ஏழை முதியோருக்கும் வேட்டி, சேலை, பண உதவி இதுவரை எந்த ஆட்சியிலும் செய்யப்படவிலலை என்பது அனைவரும் அறிந்த உண்மை.

தாழ்த்தப்பட்டவர்களுக்கு கல்வி, வேலை வாய்ப்பு, தொழிற் கல்வி முறை போன்ற திட்டங்கள் வருங்கால தாழ்ந்த சமுதாயத்திற்கு ஒரு வரப்பிரசாதமாக அமைந்துள்ளது. முதல்வர் அவர்கள் நீதி, நேர்மை, பண்புள்ளம் கொடையுள்ளம், தாழ்த்தப்பட்ட மக்களின் மீது அனுதாபம் அனைத்தும் கொண்டவர்.

இவரது ஆட்சியில்தான் ஆதி திராவிடர் சமுதாயத்தைச் சார்ந்த இராசாங்கத்துக்கு எம் பி. பதவி தந்துள்ளார். அண்ணா திமுகழகத்திலும் தலைமை நிர்வாகிகளாக தொடர்ந்து ஆதிதிராவிடர்கள் யாரேனும் ஒருவர் பொறுப்பேற்கும்படி புரட்சித்தலைவா அவர்கள் கவனம் செலுத்தியுள்ளார்.

### உடனடி நிவாரணம்

இதுபோன்ற பதவிகள் தி.மு க.வில் யாருக்கும் தரப்படவில்லை.

தாழ்த்தப்பட்டோருக்கு ஒரு தலைவர் உண்டு என்றால் அவர் புரட்சித்தலைவரே, அவரது தலைமையில் தான் தாழ்த்தப்பட்ட சமுதாயம் முன்னேறும். முன்னேறிக்கொண்டு வருகின்றது. வெள்ளத்தால பாதிக்கப்பட்ட போதும் நம் இன மக்களின துயர் துடைத்து உடனடி நிவாரணம் அளித்தவர் புரட்சித் தலைவர் ஒருவரே.

அவரைப் போன்று இதுவரை நம் சமுதாயத்திற்காக இப்படிப்பட்ட ஏராளமான முன்னேற்ற திட்டங்களை யாரும் செய்யவில்லை என்பதால்தான் என்னை அவரது தொண்டனாக இணைத்துக் கொண்டேன்.

எனவே இப்படிப்பட்ட நல்ல உள்ளம் கொண்ட தானைத் தலைவர் கரத்தை வலுப்படுத்த தாழ்த்தப்பட்டோர் அனைவரும் அவரது தலைமையின் கீழ் இயங்கி புதியதோர் உலகைக் காண வேணுமாய் கேட்டுக் கொள்ளுகிறேன்.

இவ்வாறு வானூர் பரமசிவம் தனது அறிக்கையில் தெரிவித்துள்ளார்.

கழகத் தோழர்

## மருத்துவ மனையில் அனுமதி

சென்னை, மே. 21- சென்னை அண்ணாநகரில் தேர்தல் பிரசாரத்தின்போது கழகத்தோழர் சங்கர் தாக்கப்பட்டு காயம் அடைந்தார்.

சிகிச்சைக்காக அவர் சென்னை பொது மருத்துவமனையில் சேர்க்கப்பட்டார். அமைச்சர் ராகவானந்தம், எம். எல். ஏக்கள் ஏ. சி. சண்முகம் முனிரத்தினம் ஆகியோர் மருத்துவமனைக்குச் சென்று உடல் நலம் விசாரித்தனர்.

போலீஸ் நிலையம் மீது தாக்குதல்

# பம்பாய் கலவரத்தை அடக்க ராணுவம் நடவடிக்கை

## சாவு எண்ணிக்கை 83 ஆக உயர்வு

பம்பாய், மே 21- பம்பாயில் கலவரத்தை அடக்க ராணுவத்தை மாநில அரசு கேட்டுக் கொண்டதற்கு இணங்க, ராணுவம் வட கிழக்கு பம்பாயில், சாலைகளில் ரோந்து சுற்றி வருகிறது. கலவரங்களில் இறந்தவர்கள் எண்ணிக்கை 83 ஆக உயர்ந்துளளது.

பம்பாயிலும் பிவாண்டியிலும் வன்முறைகலவரங்கள் தொடர்ந்து நடந்து வருவது தெரிந்ததே.

கடந்த 3 நாட்களில் மட்டும், 83 பேர் கொல்லப்பட்டுள்ளனர்

கலவரத்தை அடக்க மாநில போலீசாருக்கு உதவியாக இருக்க ராணுவத்தின் உதவியை மாநில அரசு கோரியது.

இதையடுத்துராணுவத்தினர் வட கிழக்கு பம்பாயில் சாலைகளில் ரோந்து வந்தனர்.

பம்பாய் மற்றும் தானே பகுதியில் மட்டும் நேற்று 13 பேர் கலவரங்களில் மரணமடைந்தனர்.

கலவரங்களில் 150க்கும் மேற்பட்டோர் காயம் அடைந்துள்ளனர்.

பம்பாயில் பெர்ஹம்பதா காவல் நிலையத்தை வன்முறை கும்பல் தாக்கியது.

இதையடுத்து போலீசார் துப்பாக்கிச் சூடு நடத்தினர்.

இதில் 6 பேர் கொல்லப்பட்டனர், 7 பேர் காயமடைந்தனர்.

தானே மருத்துவமனை பிணவறையில் பிணங்கள் குவியலாக குவிக்கப்பட்டுள்ளன.

பம்பாயில் ஏராளமான பஸ்கள், மின்சார ரெயில் பெட்டிகள மீது வன்முறையாளர்கள் கல்வீச்சு நடத்தினர்.

இதனால் பஸ்கள், ரெயில் பெட்டிகளுக்கு சேதம் ஏற்பட்டது.

கலவரப்பகுதிகளை பிரதமர் இந்திராகாந்தி இன்று பார்வையிடுகிறார்

## பயங்கர பஸ் விபத்து: 4 பேர் நசுங்கி சாவு

பாம்பாய், மே 21- மராட்டியமாநிலஅரசுக்கு சொந்தமானபோக்குவரத்து கழகத்தின் பஸ் ஒன்று ரத்னகிரி மாவட்டத்தில் கஷேதிகாட் என்னுமிடத்தில் பயங்கர விபத்துக்குள்ளாகியது.

இந்த விபத்தில் பஸ் டிரைவர் உள்பட 4 பேர் பரிதாபமாக நசுங்கி செத்தனர், மற்றும் 45 பேர் காயம் அடைந்தனர். அவர்களுக்கு சிகிச்சை அளிக்கப்பட்டது.

சென்ட்ரல் அருகே

## பியட்கார் அபேஸ்

சென்னை. மே 21— சென்னை வேப்பேரியைச் சேர்ந்தவர் தாமஸ் தன்னுடைய மருமகளை தாதர் எக்ஸ்பிரஸ் ரெயிலில் வெளியூர் அனுப்ப சென்னை சென்டிரல் ரெயில் நிலையத்துக்காரில் வந்தார்.

காரை ரெயில்நிலைய அருகே நிறுத்திவிட்டு பிளாட்பாரத்துக்குச் சென்றார்.

அவர் திரும்ப வந்தபோது காரை காணவில்லை. யாரோ அபேஸ் செய்துவிட்டார்கள் இந்தச் சம்பவம் கடந்த 15ந் தேதி காலை 10மணி அளவில் நடந்ததாகக் கூறப்படுகிறது. பியட்கார் நெம்பர் டி எம் ஒய். 3319

இதுபற்றிய புகாரைத் தொடர்ந்து சென்டிரல் ரெயில் நிலைய போலீஸ் சப் இன்ஸ்பெக்டர் சங்கரபாண்டியன் தீவிர புலன் விசாரணை செய்து வருகிறார்.

அண்ணாநகர் தொகுதியில்

# கள்ள ஓட்டு போட முயன்ற 60 பேர் கைது

## தஞ்சையில் 4 தி. மு. க.வினர் கைது

சென்னை. மே 21- சென்னை அண்ணா நகர் தொகுதியில் நடந்து முடிந்த இடைத்தேர்தலில் கள்ள ஓட்டு போட முயன்றதாக 60 பேரை போலீசார் கைது செய்துள்ளனா.

சென்னை அண்ணாநகர் தொகுதியில் நேற்று ஓட்டுப்பதிவு நடைபெற்றது

இந்த தேர்தலில் கள்ள ஓட்டு போட பலர் முயற்சி செய்கிறார்கள் என்று சென்னை நகர போலீஸ் கமிஷனர் ஸ்ரீபாலுக்கு தகவல் கிடைத்தது.

உடனே அவர் துணை கமிஷனர் ஜாபர் அலியை அது பற்றி கண்காணிக்குமாறு உத்தரவிட்டார் துணை கமிஷனர் ஜாபர் அலி மற்றும உதவி கமிஷனர் ராமநாதன் ஆகியோர எலலா வாக்கு சாவடிகளுக்கும் சென்றுகண்காணித்தனர்

இதையொட்டி அண்ணா நகர் தொகுதியில கள்ள ஓட்டு போட முயன்ற 60 பேரை போலீசார் கைதுசெய்தனர். அவர்கள் அனைவரும் இன்று (திங்கட் கிழமை) எழும்பூர் மெட்ரோபாலிடன் மாஜிஸ்டிரேட்கோர்ட்டில் ஆஜர்படுத்தப்படுவார்கள

சர்வ் பாங்கு காலனி அருகே இருந்த ஓட்டுச் சாவடியில் தி. மு. க. வினர் கள்ள ஓட்டு போட முயன்றனர் இதை அண்ணாநகர் 71- வது வட்ட இந்திராகாங்கிரஸ் பிரமுகர் கிருஷ்ணன மற்றும் அவரது நண்பர்கள் தடுத்தனர் இதனால் கோபமடைந்த தி.மு.க.வினர்கிருஷ்ணனையும் மற்றும் அவருடைய நண்பர்களையும் கண்முடித்தனமாக தாக்கினர். இது குறித்து கிருஷ்ணன கீழ்பாக்கம் போலீஸ்நிலையத்தில் புகார் செய்துள்ளார்.

தஞ்சை தொகுதியில் கள்ள ஓட்டுப்போட முயன்றதாக கரபழையை சேர்ந்த அழகன் உட்பட 4 பேரை போலீசார் கைது செய்துள்ளனர்.

Published by K. RAVINDRAN on Behalf of Thangamani Publications and Printed by him at ALL INDIA ANNA D M K PERARIGNAR ANNA TRUST PRESS at 34, Nelson Manickam Road, Madras 600 029. Editor: E. PARASURAMAN.